# அமிஸ்டாட்

## ஒரு அடிமைக் கப்பலின் கதை



ஆங்கிலத்தில்: பாட்ரிசியா சி. மெக்கிசாக்

படங்கள்: சன்னா ஸ்டான்லி

தமிழில்: குமரேசன் முருகானந்தம்

அமிஸ்டாட்

ஒரு அடிமைக் கப்பலின் கதை

ஆங்கிலத்தில்: பாட்ரிசியா சி. மெக்கிசாக்

படங்கள்: சன்னா ஸ்டான்லி

தமிழில்: குமரேசன் முருகானந்தம்

1839ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஒரு நாள், கடலோரக் காவல்படையின் கப்பலில் இருந்த இரண்டு அதிகாரிகள் ***லாங் ஐலேண்டில்*** உள்ள கடல் பகுதியில் விசித்திரமான ஒன்றைக் கண்டனர். அது ஒரு நீண்ட கருப்பு நிற கப்பல். அதில் ஸ்பெயின் நாட்டுக் கொடி பறந்தது. அதன் பெயர் **அமிஸ்டாட்**. ஸ்பானிஷ் மொழியில், "நட்பு" என்று பொருள்படும்.

என்ன விசித்திரமானதொரு கப்பல் அது?

அதன் பாய்மரங்கள் சிறு துண்டுகளாக கிழிந்திருந்தன. அதில் மாலுமி இல்லை. கப்பல் எங்கும் செலுத்தப்படாமல் அலைக்கழிந்து கொண்டிருந்தது. மேலும் கறுப்பின மனிதர்களின் கூட்டம் ஒன்று மேல் தளத்தில் கத்திக் கொண்டிருந்தது.

அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள்? கப்பல் ஏன் நியூயார்க்கிற்கு வந்தது? கப்பலில் இருந்தவர்கள் யார்?



அது என்னவென்று கண்டறிய அதிகாரிகள் முடிவு செய்தனர். எனவே அவர்கள் கப்பலை நோக்கி படகை செலுத்தினர். இப்போது அமெரிக்க வரலாற்றில் விசித்திரமான மற்றும் மிகவும் சுவாரஸ்யமான விஷயம் ஒன்றின் ஒரு அங்கமாக இருப்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

இது பல மாதங்களுக்கு முன்பு ஆப்பிரிக்காவின் மேற்கு கடற்கரையில் உள்ள **சியரா லியோனில்** தொடங்கியதாகும்.




Sierra Leone

Mende tribal area

**சங்க்பே பீயே** (உச்சரிப்பு: **சங்-பெ பீ-யே**) என்ற நபர் ஒரு சிறிய கிராமத்தில் வசித்து வந்தார். அவர் மெண்டே (உச்சரிப்பு: மெண்-டே) பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர். **சங்பே**, கூம்பு வடிவ புல்கூரையுடைய வட்டமான வீட்டில் வளர்ந்தார்.

பின்னர், அவர் தனது மனைவி மற்றும் மூன்று குழந்தைகளுக்கு அதே மாதிரியான வீட்டைக் கட்டினார். அவர் ஒரு பணக்கார அரிசி விவசாயி, அவர்அந்த மக்களின் தலைவரும் ஆவார்.





ஒரு நாள், **சங்பே** தனியாக நடந்து கொண்டிருந்தார். திடீரென்று சிலர் அவரைச் சூழ்ந்து கொண்டனர்!

செங்பே தப்பிக்க போராடினார். ஆனால் அவர்களிடம் துப்பாக்கிகள் இருந்தன. அவர்கள் அடிமை பிடிப்பவர்கள். அவரை கடத்திச் சென்று கொண்டிருந்தனர்.

**சங்பே** ஒரு அடிமைக் கப்பலின் அடி தளத்திற்கு இழுத்துச் செல்லப்பட்டார். உள்ளே நூற்றுக்கணக்கான ஆண்கள், பெண்கள், குழந்தைகள் நிரம்பியிருந்தனர். கப்பல் கியூபா நோக்கிச் சென்றது.

விலங்குகளைப் போல இருளில் சங்கிலியால் பிணைக்கப்பட்டு மக்கள் அழுதவாறு இருந்தனர். கருணை வேண்டி மன்றாடினர்கள். **சங்பே** தனக்கு பைத்தியம் பிடித்துவிடும் என்று நினைத்தார். உடலை நீட்டவோ திருப்பவோ இடமில்லை. நாற்றம் வேதனையூட்டுவதாயும் அருவருக்கத்தக்க தாயும் இருந்தது..



அடிமைக் கப்பல் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து கியூபாவை அடைய இரண்டு மாதங்கள் ஆனது. பல ஆப்பிரிக்கர்கள் இறந்தனர். சிலர் கொல்லப்பட்டனர். பயங்கரமான பயணத்தின் போது சிலர் தற்கொலை செய்து கொண்டனர். ஆனால் **சங்பே** உயிரோடு இருந்தார்.

எதிர்காலத்தில் என்ன இருகிறது? என்று அவருக்குத் தெரியாது. ஆனாலும் அவர் நம்பிக்கை இழக்கவில்லை. அவர் தனது குடும்பத்தை மீண்டும் பார்க்க விரும்பினார். அவர்களுக்காக நான் வாழ்வேன்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டார். அவர் தாயகத்திற்குத் திரும்புவதற்கான வழியைக் கண்டுபிடித்தார்.






**கியூபா**வில், ஆப்பிரிக்கர்களுக்கு **ஸ்பானிஷ்** பெயர்கள் வழங்கப்பட்டன. **செங்பே** ஜோசப் **சின்க்வே** ஆனார். சில நாட்களுக்குப் பிறகு, அவர் மற்றொரு கப்பலிலான **அமிஸ்டாட்**டில் ஏற்றிச் செல்லப்பட்டார். இது தென் அமெரிக்காவின் கிழக்குக் கடற்கரையில் **பிரேசிலுக்கி** நோக்கிச் சென்றது. புதிய அடிமைகளுக்கு அங்கு அதிக விலை கிடைத்தது.

**சின்க்வே**, தான் ஒரு அடிமை இல்லை என்று மாலுமிகளிடம் சொல்ல முயன்றார். அவரும் மற்றவர்களும் விலங்குகள் அல்ல. கேப்டன் கேட்கவில்லை. அதற்கு  பதிலாக அவர் **சின்க்வேவை** அடித்தார்.



கப்பலில், **சின்க்வே** மற்றவர்களிடம் தைரியமாக இருக்கச் சொன்னார். உறுதியாக இரு. உயிர் பிழைத்திரு. அவர்களை விடுவிப்பதற்கான வழியைக் கண்டுபிடித்தார் அவர்.

இவர்களை பிணைத்திருந்த சங்கிலியின் ஒரு ஆணி கப்பலின் மரத்தில் உலுத்துப் போயிருந்ததால் தளர்வாக இருந்தது **சின்க்வேக்கு** ஒரு திட்டம் தோன்றியது. சங்கிலிகளைப் பிடித்திருந்த சுவரில் இருந்து ஆணியைப் பிடுங்குவதற்கு தொடர்ந்து வேலை செய்தார். அவரது கை புண்ணாகி இரத்தம் வழிந்தது, ஆனால் அது கழண்டு கொண்டது. அவர் சங்கிலிகளை கழற்றியதும், மற்றொரு கையை விடுவிக்கவும் முடிந்தது. அமைதியாகவும் விரைவாகவும், மற்ற



இரவின் இருளில், ஆப்பிரிக்கர்கள் வேகமாக. கொலைவெறி தாக்குதலில் இறங்கினர். அவர்கள் அங்கு கண்டெடுத்த கூர்மையான கத்திகளைக் கொண்டு கேப்டனைக் கொன்றனர். பின்னர் சமையல்காரரை கொன்றனர். மாலுமிகள் கடலில் குதித்தனர். சிலர், அவசர காலத்தில் தப்பிக்க உதவும் லைஃப் போட்களில் தப்பினர்.

இரண்டு ஸ்பானிய மாலுமிகள் கப்பலில் இருந்தனர். சின்க்வே அவர்களிடம் “எங்களை திரும்பவும் ஆப்பிரிக்காவுக்குச் கொண்டு செல்லுங்கள் அல்லது இறந்து போவீர்கள்!“ என்றார் சைகையில்.

அந்த மாலுமிகள் ஒப்புக்கொண்டனர். ஆனால் அவர்கள் வேறொரு திட்டத்தை தீட்டியிருந்தனர்.
ஆப்பிரிக்காவுக்குத் திரும்புவதற்கு, **அலிஸ்டாட்** கிழக்கு நோக்கி பயணம் செய்ய வேண்டியிருந்தது. பகலில், கப்பல் உதயமாகும் சூரியனை நோக்கி கிழக்குத் திசையில் பயணித்தது. ஆனால் இரவில், ஆபிரிக்கர்களுக்கு கப்பல் எந்த திசையில் பயணிக்கிறது என்று தெரியவில்லை. எனவே ஸ்பானிய மாலுமிகள் இரவில் வடக்குத் திசையில் செலுத்தினர். தினமும். இப்படியாக வளைந்து வளைந்து பயணித்து கப்பல் அமெரிக்காவின் கிழக்கு கரையோரத்தைச் சென்றடைந்தது.



United States

Cuba

ஆகஸ்ட் 1839 வாக்கில், **அலிஸ்டாட் லாங் ஐலேண்ட்** தீவின் கடற்கரையை அடைந்தது. அப்போது தான் அந்த இரண்டு அமெரிக்க அதிகாரிகள் கப்பலைக் கண்டனர்.



**அமிஸ்டாட்** கப்பலில், என்ன நடந்தது என்று **ஸ்பெயின்** மாலுமிகளிடம் அதிகாரிகள் கேட்டனர். **அமிஸ்டாட்** ஒரு அடிமைக் கப்பல் என்று மாலுமிகள் சொன்னார்கள். **ஜோசப் சின்க்வே**வும் மற்ற 53 அடிமைகளும் கேப்டனைக் கொன்று கப்பலைக் கைப்பற்றியதை அவர்கள் சொன்னார்கள். மாலுமிகள் பணயக்கைதிகளாக இருந்தனர். அதெல்லாம் உண்மைதான். ஆனால் இரண்டு **ஸ்பானிஷ்** மாலுமிகள் ஆப்பிரிக்கர்கள் **கியூபா**வில் பிறந்ததாகக் கூறினர். அது ஒரு பொய். இது ஒரு சிறிய பொய்யாகத் தோன்றலாம். ஆனால் அது பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. 1839 இல்

அமெரிக்காவில், பல மாநிலங்களில் மக்கள் இன்னும் அடிமைகளை வைத்திருக்க முடியும். (அடிமைத்தனம் 1865 வரை முழுமையாக முடிவுக்கு வரவில்லை.) ஆனால் ஏற்கனவே சில சட்டங்கள் அடிமைத்தனத்திற்கு வரம்புகளை வைத்தன. ஆப்பிரிக்கர்களை கடத்தி அடிமைகளாக்குவது சட்டத்திற்கு எதிரானது. **அமிஸ்டாட்டி**ல் அதுதான் நடந்தது.

**சின்க்வே**வுக்கு அமெரிக்க சட்டங்கள் பற்றி தெரியாது. அவர் எப்படி அறிந்திருக்க முடியும்? **அமிஸ்டாட்** எங்கு வந்துள்ளது என்று கூட அவருக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்றை அவர் தெளிவாக தெரிந்திருந்தார். **ஸ்பானிஷ்** மாலுமிகள் மற்ற வெள்ளையர்களிடம் பொய் சொல்கிறார்கள் என்று.



மக்கள் நீண்ட வரிசையில் நின்று ஆப்பிரிக்கர்களைப் பார்க்க காசு கொடுத்தனர். பெண்கள் கெக்களித்து சிரித்தனர், பெரியவர்கள் முகத்தில் வெறுப்பைக் காட்டினார்கள். இது ஒரு அற்பத்தனமான சர்க்கஸ் காட்சி போல அவர்கள் நடந்து கொண்டார்கள்.

**அமிஸ்டாட்** அருகில் உள்ள பெரிய துறைமுகத்திற்கு கொண்டு செல்லப்பட்டது. அத்துறைமுகம் **கனெக்டிகட்**டில் இருந்தது. ஒரு நீதிபதி, ஆப்பிரிக்கர்கள் ஒரு பயங்கரமான குற்றத்தைச் செய்ததாகக் கூறினார். அவர்கள் மீது கொலை மற்றும் கலகம் செய்ததாக குற்றம் சாட்டப்பட்டது. (கப்பலின் கட்டுப்பாட்டை எடுத்துக்கொண்டது என்று பொருள்பட.) செப்டம்பர் 1839 இல் ஒரு விசாரணை அமைக்கப்பட்டது. பிணையில் விடுதலை கொடுக்கப்படவில்லை. **கனெக்டிகட்**டில் உள்ள **நியூ ஹேவன்** சிறையில் அனைவரும அடைக்கப்பட்டனர். குழந்தைகளும் உட்பட.



அடிமைத்தன ஒழிப்புவாதிகளில் சிலர் **அமிஸ்டாட்** பற்றி கேள்விப்பட்டனர். **ஸ்பானிஷ்** மாலுமிகளின் கதையை அவர்கள் நம்பவில்லை. **அமிஸ்டாட்**டில் உள்ள கறுப்பர்கள் கியூபாவில் பிறந்தவர்கள் என்றால், அவர்களில் யாரும் ஏன் **ஸ்பானிஷ்** பேசவில்லை? என்று கேள்வி எழுப்பினர். அவர்கள் ஆப்பிரிக்காவில் இருந்து சட்டவிரோதமாக் கடத்தப்பட்டிருக்க வேண்டும் ... என்றனர்.

இவர்களும் விசித்திரமானவர்கள் என்று **சின்க்வே** நினைத்தார். அவரும் மற்ற ஆப்பிரிக்கர்களும் அவர்களுக்கு முதுகைக் காட்டினர். அவரது சிறை அறையில் தனியாக, இருந்த **சின்க்வே** அவர் மீண்டும் வீட்டைப் பார்ப்பாரா? என்று கவலைக் கொண்டார். இனியும் அவர் அவ்வளவு உறுதியாக இல்லை.

இந்த விசித்திரமான நாட்டில் ஆப்பிரிக்கர்களுக்கு நண்பர்கள் இருப்பது சின்கேவுக்குத் தெரியாது. வட மாகானங்களில் பலர் அடிமைத்தனம் ஒரு பாவம் என்று நம்பினார். அவர்கள் ஒழிப்புவாதிகள் என்று அழைக்கப்பட்டனர் (சொல்லுங்கள்: a-bah-LIH-shun-ists). அவர்கள் (அடிமைத்தனத்தை) ஒழிக்க அல்லது முடிவுக்குக் கொண்டுவர விரும்பினர்



அடிமைத்தன ஒழிப்புவாதிகள் ஆப்பிரிக்கர்களுக்கு உதவ பிரபலமான வழக்கறிஞர் ஒருவரை அமர்த்தினர். அவர் பெயர் ரோஜர் ஷெர்மன் பால்ட்வின். அவரும் அடிமைத்தனத்திற்கு எதிரானவர். அவரது தாத்தா சுதந்திரப் பிரகடனத்தில் கையெழுத்திட்டவர். காரியம் எளிதாக இருக்காது என்று பால்ட்வினுக்குத் தெரியும். முதலில், அவரால் அவரது கட்சிக்காரர்களுடன் பேச முடியவில்லை. உண்மையில், அவர்கள் எந்த ஆப்பிரிக்க மொழியைப் பேசுகிறார்கள் என்பது கூட அவருக்குத் தெரியவில்லை.





பால்ட்வின் சைகை மொழியைப் பயன்படுத்த முயன்றார். அது பயனளிக்கவில்லை. பால்ட்வின் மண்ணில் படங்களை வரைந்தார். அதுவும்  பயனளிக்கவில்லை. இந்த மனிதர் உதவ விரும்புவதை சின்க்வே அறிந்திருந்தார். ஆனால் அவரும் உதவியற்றவராக உணர்ந்தார்.



பின்னர் **பால்ட்வின் சின்க்வே**வின் மொழி ***மெண்டே*** என்பதை அறிந்தார். அது ஒரு தொடக்கம். அவர் ***மெண்டே*** பேசும் ஒரு கறுப்பின மனிதரைக் கண்டுபிடித்தார். அவர் பெயர் **ஜேம்ஸ் கோவி**. அவரும் ஆப்பிரிக்காவில் இருந்து கடத்தப்பட்டவர். ஆனால் **கோவி** அதிர்ஷ்டசாலி. அவர் விடுவிக்கப்பட்டு ஒரு மாலுமியாகிவிட்டார். இறுதியாக, **கோவி** மூலம்,**பால்ட்வினும் சின்க்வேவும்** ஒருவரையொருவர் புரிந்து கொள்ள முடிந்தது.

**"நாங்கள் சுதந்திரமாக இருக்க விரும்புகிறோம்,"** என்பது **பால்ட்வி**னிடம் **சின்க்வே** சொன்ன முதல் விஷயம். பின்னர் **சின்க்வே** பயங்கரமான முழு கதையையும் கூறினார். ஆம்! ஆப்பிரிக்கர்கள் கடத்தப்பட்டதை **பால்ட்வினு**க்கு இப்போது தெரியும். நீதிமன்றத்தில் அவர் சொன்ன கருத்து இதுதான்

**ஜனவரி** 8, 1840 இல், ஒரு விசாரணை தொடங்கியது. **நியூ ஹேவன்** நீதிமன்ற வளாகம் நிரம்பி வழிந்தது. ஆப்பிரிக்கர்கள் சுதந்திரமான மக்கள் என்று **பால்ட்வின்** கூறினார். அவர்கள் யாருடைய சொத்தோ. விலங்குகளோ அல்லர். அவர்கள் கடத்தப்பட்டிருந்தனர். **அமிஸ்டாட்டில்**, அவர்கள் தங்களை தற்காத்துக் கொண்டனர்.

**"இங்குள்ள எந்த மனிதனும் செய்வது போலவே,**“என்று **பால்ட்வின்** நெரிசலான நீதிமன்ற அறையில் கூறினார்

ஆறு நாள் விசாரணையின் போது, **சின்க்வே**வும மற்ற சில ஆப்பிரிக்கர்களும் சாட்சி கூண்டில் ஏறினர். அவர்கள் விவசாயிகளும் கைவினைஞர்களும், அப்பாக்களும் மகன்களும், மகள்களும் சகோதரிகளும் ஆவர். அவர்கள் ஒரு சமூகத்தின் பிரஜைகள்.



நீதிபதி ஒப்புக்கொண்டார். **அமிஸ்டாட்** ஆப்பிரிக்கர்கள் பிறவியிலேயே சுதந்திரமானவர்கள்... இப்போதும் சுதந்திரமானவர்களே, அடிமைகள் அல்ல என்று அவர் தீர்ப்பளித்தார்.
என்னே ஒரு வெற்றி!
கடைசியாக பயங்கரமான காலம் முடிந்துவிட்டதாக **சின்க்வே** வும் மற்றவர்களும் நினைத்தனர்.



**மெண்டே** மக்களுக்கு சுதந்திரம் எவ்வளவு முக்கியம் என்று **சின்க்வே** கூறினார். அவர்கள் கலை, இசை மற்றும் நடனத்தை விரும்புகின்றனர். யுனைடெட் ஸ்டேட்ஸ் மக்களைப் போலவே, மெண்டே மக்களும் அரசாள்வதற்கான சட்டங்களை நம்புபவர்கள். அவர்களுக்கும் நீதிபதிகளும், நடுவர் மன்றங்களும் உண்டு.
"நாங்களும் மனிதர்கள் தான்" என்று **சின்க்வே** நீதிபதியிடம் கூறினார்



ஆனால் அது கொண்டாடுவதற்கான நேரமல்ல என்றானது. அவர்களின் வழக்கறிஞர் **ரோஜர் பால்ட்வின்** மோசமான செய்தி ஒன்றைக் கூறினார். அது, **ஸ்பெயின்** அரசாங்கம் இந்த ஆப்பிரிக்கர்களை தங்கள் சொத்து என்று வலியுறுத்தியது. **நியூ ஹேவன்**, **கனெக்டிகட்**டில் உள்ள ஒரு நீதிபதி என்ன சொன்னார் என்பது முக்கியமல்ல என்றதுவே. இன்னும் மோசமானது, **அமெரிக்க** ஜனாதிபதி **மார்ட்டின் வான் ப்யூரன் ஸ்பெயி**னுடன் உடன்பட்டார் என்பது தான்.



இனி என்ன நடக்கப் போகிறது?
மற்றொரு விசாரணை நடக்க வேண்டும். இந்த வழக்கிற்கு உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும். உச்ச நீதிமன்றம் அமெரிக்காவின் உச்ச நீதிமன்றமாக இருந்தது. ஆனால் புதிய விசாரணை இன்னும் ஒரு வருட காலத்திற்கு நடைபெறப் போவதில்லை.

இதற்கிடையில், **அமிஸ்டாட்** ஆப்பிரிக்கர்கள் மீண்டும் சிறைச் சென்றனர்.

**சின்க்வே** கோபமடைந்தார். ஆனாலும், ஆப்பிரிக்கர்களை பொறுமையாக இருக்கவும், "நம்பிக்கை இழக்க வேண்டாம்." என்றும் கூறினார்.

**நியூ ஹேவன்** மக்கள் ஆப்பிரிக்கர்களின் பக்கம் இருந்தனர். ஆப்பிரிக்கர்கள் சிறையில் இருக்கவேண்டியவர்கள் அல்ல. சிறை அழுக்காக இருந்தது. உணவு மோசமானதாகமா இருந்தது. ஆப்பிரிக்கர்களில் சிலர் நோய்வாய்ப்பட்டனர். அவர்களுக்கு நல்ல தண்ணீர் மற்றும் உலர்ந்த சுத்தமான ஆடைகள் கொண்டு வரப்பட்டன. இருந்தாலும், அனைவரும் சிறையில் இருக்க வேண்டியதாயிற்று. குழந்தைகள் உட்பட.





இந்த புதிய சோதனையில் வெற்றி பெற **ரோஜர் பால்ட்வினுக்கு** உதவி தேவைப்பட்டது. ஜனாதிபதி உதவப் போவதில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. ஆனால் முக்கியமான வேறு யாராவது இருக்கலாம். **பால்ட்வின்** ஒரு முன்னாள் ஜனாதிபதியைப் பார்க்கச் சென்றார்: அவர் **ஜான் குயின்சி** ஆடம்ஸ் ஆவார்.

ஜான் **குயின்சி ஆடம்ஸ்** 1825 முதல் 1829 வரை ஜனாதிபதியாக இருந்தவர். அவர் ஜனாதிபதி **ஜான் ஆடம்ஸின்** மகனும் ஆவார். இப்போது அவர் பிரதிநிதிகள் சபையின் உறுப்பினராக இருந்தார். அவருக்கு வயது 73. இருந்தாலும் அவரது சிந்தனை கூர்மையாக இருந்தது. அவன் பேச்சு இன்னும் கூர்மையாக இருந்தது. மேலும் அவர் சட்டம் பற்றி அனைத்தும் தெரிந்தவர்.

**ஜான் குயின்சி ஆடம்ஸ்** சிறையில் உள்ள ஆப்பிரிக்கர்களை சந்தித்தார். அவர்கள் அனைவரும் இளைஞர்கள் என்று அவர் அதிர்ச்சியடைந்தார். "அவர்களில் ஒருவர் கூட 30 வயதுக்கு மேல் இல்லை" என்று அவர் தனது நாட்குறிப்பில் எழுதினார்.

இப்போது, **மெண்டே** மக்களில் இருவர் ஆங்கிலத்தில் எழுதக் கற்றுக்கொண்டனர். அவர்கள் **ஆடம்ஸுக்கு** ஒரு கடிதம் அனுப்பினார்கள். அதில் அவர்கள் "தயவுசெய்து **கிரேட் கோர்ட்**டில் எங்கள் கதையைச் சொல்லுங்கள்" என்று கேட்டுக்கொண்டிருந்தார்களா.



**ஆடம்ஸ்** உதவிக்கான அவர்களின் வேண்டுகோளைக் கண்டு நெகிழ்ந்தார். "ஓ! இந்த வழக்குக்கும் இந்த மனிதர்களுக்கும் நான் எப்படி நீதி பெற்று தருவேன்?“என்று அவர் மிகவும் கவலையுமடைந்தார். ஆனால் அவர் தன்னால் முடிந்தவரை முயற்சி செய்வார்.

மாதங்கள் கடந்தன. நோய்வாய்ப்பட்ட பல கைதிகள் சிறையில் இறந்தனர். அடுத்த விசாரணை நாளான, மார்ச் 1, 1841 அன்று, **அமிஸ்டாட்** ஆப்பிரிக்கர்களில் 37 பேர் மட்டுமே உயிரோடிருந்தனர்.

உச்ச நீதிமன்றம் **வாஷிங்டன்** டிசியில் இருந்தது. வழக்கை வெல்ல, வழக்கறிஞர்கள் குறைந்தது ஐந்து நீதிபதிகளையாவது ஆப்பிரிக்கர்கள் அடிமைகள் அல்ல என்று நம்ப வைக்க வேண்டும். ஆனால் ஐந்து நீதிபதிகள் அடிமை மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். அவர்களில் யாராவது ஆப்பிரிக்கர்கள் அப்பாவிகள் என்று நம்புவார்களா?

முதலில், ஆப்பிரிக்கர்களுக்கு எதிரான தரப்பு அதன் வாதத்தை முன்வைத்தது. ஆப்ரிக்கர்கள் **ஸ்பானிஷ்** கப்பலில் இருந்ததாக வழக்கறிஞர் கூறினார். அவர்கள் **ஸ்பெயினின்** சொத்து. "விசாரணைக்காக அவர்கள் **ஸ்பெயினுக்குத்** திரும்பியாக வேண்டும்.“ என்றது.



அடுத்து, **ரோஜர் பால்ட்வின்** முறை வந்தது. மூன்று நாட்களுக்கும் மேலாக அவர் பேசினார் 14 மணி நேரம்! "நாங்கள் ஒரு நாற்காலி அல்லது மேசையை என்ன செய்வது என்பது பற்றி பேசவில்லை, மாறாக அவர்கள் இரத்தமும் சதையும் கொண்ட மனிதர்கள்" என்று அவர் உச்ச நீதிமன்றத்தில் நீதிபதிகளிடம் கூறினார்.

அடுத்து, இறுதியாக, இது **ஜான் குயின்சி ஆடம்ஸின்** முறை. அவர் சிறந்த பேச்சாளராகப் புகழ் பெற்றவர். “இந்த மனிதர்கள் குற்றவாளிகள் அல்ல. அவர்கள் சுதந்திர மனிதர்களாக தங்களை தற்காத்துக் கொண்டனர்.” என்றார்.

**ஆடம்ஸ், சின்க்வே**வையும் மற்றவர்களையும் அமெரிக்கப் புரட்சியின் ஹீரோக்களுடன் ஒப்பிட்டார். **பேட்ரிக் ஹென்றி** சுதந்திரத்திற்காக போராடினார். ***எனக்கு விடுதலை கொடுங்கள் அல்லது மரணத்தைத் தாருங்கள்*** என்று முழங்கியிருந்தார்.

"**பேட்ரிக் ஹென்றி** ஒரு குற்றவாளியா?“ என்று **ஆடம்ஸ்** நீதிபதிகளிடம் கேட்டார்.

நீதிமன்ற அறையில் பெரும் அமைதி நிலவியது. **ஆடம்ஸின்** கணீரென்ற குரல் மட்டுமே ஒலித்தது. “***இல்லை***”, "அவர் ஒரு **ஹீரோ**.“ என்றார்.

உச்ச நீதிமன்ற நீதிபதிகளில் பெரும்பாலானோர் ஒப்புக்கொண்டனர். **ஆடம்ஸ்** வழக்கில் வெற்றி பெற்றார்! **அமிஸ்டாட்** ஆப்பிரிக்கர்கள் இறுதியாக சுதந்திரமடைந்தனர்.

செய்தி அறிந்ததும் அவர்கள் மகிழ்ச்சியில் துள்ளி குதித்தார்கள். உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பை யாராலும் - ஜனாதிபதியால் கூட மாற்ற முடியாது.





அது மார்ச் 9, 1841. ஆப்பிரிக்காவில் அவர்கள் கடத்தப்பட்டு இரண்டு நீண்ட மற்றும் பயங்கரமான ஆண்டுகள் கடந்துவிட்டன. அவர்கள் தங்கள் நன்றியைத் தெரிவிக்க விரும்பினர். அவர்கள் **ஜான் குயின்சி ஆடம்ஸுக்கு** ஒரு பைபிளைக் கொடுத்தார்கள். உள்ளே, "***நீங்கள் எங்களை விடுவித்ததால் நாங்கள் உங்களுக்கு மிக்க நன்றி தெரிவித்துக்கொள்கிறோம்.***" என்ற வார்த்தைகள் இருந்தன.



நவம்பர் 27 அன்று **சின்க்வே**வும் மற்றவர்களும் **நியூயார்க்கில்** இருந்து புறப்பட்டனர். கப்பலுக்கு **ஜென்டில்மேன்** என்று பெயரிடப்பட்டது. **மென்டே** மாலுமியும் மொழிபெயர்ப்பாளருமான **ஜேம்ஸ் கோவி** அவர்களுடன் ஆப்பிரிக்கா திரும்பினார். அவர்கள் ஜனவரி 11, 1842 அன்று **சியரா லியோனில்** உள்ள **ஃப்ரீடவுனுக்கு** வந்தனர்.

அவர்கள் தாயகம் திரும்பினார்கள். கடைசியில் ஒருவழியாக வீடு வந்து சேர்ந்தார்கள்..

அமெரிக்காவில் இருந்த காலம் முழுவதும், **சின்க்வே**க்கு ஆங்கிலம் நன்றாகத் தெரிந்திருந்தது. அவர் மக்கள் நடுவே உரையாற்றுவது இல்லை. இருப்பினும், அவர் விடைபெறும் நேரம் வந்தபோது, அவரது பேச்சு ஆங்கிலத்தில் இருந்தது. "***நண்பர்களே,*** "" ***நான் அனைவருக்கும் நன்றி கூறுகிறேன்.***" என்றா அவர்.



**சின்க்வே**வுக்கு என்ன ஆனது என்பது யாருக்கும் தெரியாது. அவர் தனது மனைவி மற்றும்  குழந்தைகளுடன் தாயகத்தில் மகிழ்ச்சியாகவும் நலமாகவும் இருப்பதாக செய்திகள் வந்தன. மீண்டும் சுதந்திர வாழ்வு.

**அமெரிக்கா**வில், 20 ஆண்டுகளுக்கும் மேலாக அடிமைத்தனம் தொடர்ந்தது. அடிமைத்தனத்தை நிரந்திரமாக முடிவுக்கு கொண்டுவருவதற்கு உள்நாட்டுப் போர் மற்றும் அரசியலமைப்பு சட்டத் திருத்தம் தேவைப்பட்டது. இருப்பினும், **அமிஸ்டாட்** வழக்கு அதற்கு எதிராக போராடும் அனைத்து மக்களுக்கும் நம்பிக்கையை அளித்தது.

"நாங்களும் மனிதர்கள்தான்!" என்று **சின்க்வே** தனது விசாரணையின் போது கூறியிருந்தார். அவருடைய வார்த்தைகள் அடிமைத்தனத்தின் இதயத்தை துளைத்தன.

